# அம்பலகாரர் / அம்பலம் வரலாறு













**கள்ளர் மரபினரின் அம்பலகாரர்**

*"அம்பலகாரர்" என்பது கள்ளர் சாதிப் பட்ட பெயர்களுள் ஒன்றாகும். அம்பலகாரன் என்ற சொல்லுக்கு "கள்ளர் சாதித் தலைவன்" என்றும் "கள்ளர் நாட்டுத் தலைவன்" என்றும் பொருள் தருகிறது தமிழகராதி. அம்பலம் என்பது பிரச்சனைகளை அம்பலப்படுத்தி, அதாவது வெளிப்படுத்தி விவாதித்து தீர்வு காண்கின்ற பொது சபை. அதனை தலைமை தாங்கி வழிநடத்துபவன் அம்பலக்காரன். அவ் அம்பலக்காரன் நீதி அதிகாரமுடையவனாகவும், காவல் அதிகாரம் உடையவனாகவும் இருப்பான்.*



வை.பு.வையாபுரி
பெரிய அம்பலகாரர்
மேலூர் 18 பட்டி கிராமம்
மறைவு : 1954



P.நல்லமணி B.A.,B.L.,
அம்பலகாரர் நாவினிப்பட்டி
மேலூர் வட்டார தேவர்
சமுதாயத்தின் முதல்வழக்கறிஞர்
மறைவு : 1967



சிவ.சு.மு.சிவராமன்
பெரியஅம்பலகாரர் வெள்ளலூர்நாடு
1957-62 டிஸ்ட்ரிக்போர்டு மெம்பர்
1962-67 சட்டமன்ற உறுப்பினர்
மேலூர் தொகுதி மறைவு : 1984



K.C..வீரராகவன் B.A.,
A.அரியப்பன்பட்டி A.வல்லாளபட்டி
தேவரின் நெருங்கிய நண்பர்
அ.இ.பார்வர்ட்பிளாக்
மாநிலச் செயலாளர்
மறைவு : 1974



ச.வீ.சந்தனம்பலம் (எ) வீரணம்பலம்
பெரியஅம்பலகாரர்
கச்சிராயன்பட்டி
மறைவு : 1982



K.M.R.முத்து அம்பலம்
மதுரை டிஸ்டிரிக் போர்டு மெம்பர்
கள்ளந்திரி
மறைவு-1973

*கிராமங்களில் ஊர்த்தலைவர்களாக அம்பலகாரர்கள் இருந்து வருகிறார்கள். இவர்கள் தங்களது பெயருக்குப் பின்னால் "அம்பலம்" என்ற வார்த்தையைப் பட்டமாகப் பயன்படுத்திக் கொள்கிறனர்.*

## சோழர் கால கல்வெட்டு

சோழர் காலத்தில் கிராம ஊர்சபை கூடும் இடம் அம்பலம் என அழைக்கப்பட்டது. ஊர்சபையை ஆள்பவர்கள் அம்பலார், அம்பலம் ஆள்பவர் என அழைக்கப்படுவர். கிபி 10 ஆம் நூற்றாண்டில் முத்தூற்கூற்றம் கப்பலூர் நாட்டுப் பகுதியில் கள்ளம்பலதேவன் என்று கல்வெட்டில் குறிப்பிடப்படுகிறார். இன்றும் கப்பலூர் கள்ளர் மரபினை சேர்ந்த கரியமாணிக்கம் அம்பலம் வழியினரால் ஆளப்படுகிறது. கள்ளர்களுக்கு அம்பலம் எனும் பட்டம் தொன்று தொட்டு வழங்கப்படுவதை இந்த கல்வெட்டு உரைக்கிறது.

**Inscription No. 60.**

**Place:**—Tirumayam Taluk—Neriñjikkuḍi—On another slab at the south-east corner of the Nerúñjikkuḍi tank.

Sambatiyar

**Dynasty and King:**—Cóḷa—Parakésarivarman.

**Date:**—Sixteenth year of the King.

**Language and Script:**—Tamil—18 lines—last line incomplete.

**Translation:**—

"Hail! Prosperity! — Glory to the King? *—16th year of Kó-Parakésari-panmar (King Parakésarivarman). In this year, ten *kaḻañjus* of gold (*pon*) were given for the tank at Neriñjikkuḍi in the Ollaiyúr kúṛṛam (division), ... ... ... ... by Kallambalandavan of Màvanúr in the Muttúr kuṛṛam of the Pàṇḍinàḍu (province) ... ... ... ... ... with the annual interest on this gold, he had the *ulliyakkuḷi* † sunk ... ... ... ..."

அம்பலப்புறம் :- (அ) கிராமசபை கூடும் மண்டபத்தின் நிர்வாகத்திற்கு கிராமசபையார் ஒதுக்கிய கிராமப்பொதுநிலம். கோயிலைச் சார்ந்ததாக அமைக்கப்பெறும் அம்பலம், அறச்சாலையாக நிகழ அளிக்கப்பெறும் இறையிலிநிலமும் இப்பெயர் பெறும். "நான் எடுப்பித்த அம்பலத்துக்கு அம்பலப்புறமாக உதகபூர்வஞ் செய்து குடுத்து இதுக்கு நிவந்தஞ்செய்தபடி தண்ணீரட்டும் பிராமணனொருவனுக்கும் இருவர் பிராமணர் உண்ணவும், அம்பலம் மெழுகுவாளுக்கும். புதுக்குப்புறத்திற்கும் ஆக நிவந்தமாவதாகவும்."

(முதல் இராசராசன் கி.பி.991. தெ. கல். தொ.8. கல். 612)

**கிபி 10 ஆம் நூற்றாண்டில் கப்பலூர் நாட்டு பகுதியை சேர்ந்த கள்ள அம்பலாண்டவர்( கள்ளர் அம்பலம்) புதுக்கோட்டையில் இருந்த நீர்நிலைகளுக்கு தானமாக தானம் அளித்துள்ளார்.**

# கப்பலூர் கரு. இராம. கரியமாணிக்கம் அம்பலம்





## தமிழகராதி

1. அம்பலக்காரன் : கள்ளச்சாதித் தலைவன் (chief of the Kallar caste), he who publishes the decrees of the assembly,
2. கள்ளச்சாதி : ஒரு சாதியர், அம்பலகாரச்சாதி
3. அம்பலக்காரன் : கள்ளச்சாதித் தலைவன், சபையின் தீர்மானத்தை வெளியிடுவோன்
4. அம்பலம் : சபை, சாதிக்கூட்டம் ,
5. அம்பலக்காரர் : நாட்டரசர்

*(அம்பலகாரன் என்பது வலையர் பட்டமாகவும் அகராதி விளக்கம் தருகிறது, அம்பலக்காரன் பட்டத்தை அம்பலக்காரன் என்று தனி சாதியாக சாதி சான்றிதழ்களை வலையர்கள் வாங்குகின்றனர்)*

கவென்பர் (திருக்கோ. ௬அ, உரை.) 3. சேந்தனென்னும்பிரபுவுக்குடையதாயிருந்த ஒருதேசம். 4. பழிச்சொல்.

அம்பலக்கூத்தன் — சிவன். (உ-ம்.) "அனைத்தும்வேடமா மம்பலக்கூத்தனை" (தேவா. திருநா ஐஙதா. திருக்குறு கோயி. ௨:௧.)

அம்பலகாரன் — 1. கள்ளரென்னுஞ் சாதியாரின் தலைவன். 2. சபையாருடையகட்டளையைப் பிரசித்தஞ்செய்வோன்.

அம்பலத்தாடி — சிவன். (உ-ம்.) "புனையுமம்பலத்தாடிபொற்பாதமும்போற்றி" (சூத. எக்கி. பூ. ௪௩: ௪௪.)

அம்பலத்தி — 1. தான்றிமரம். 2. தில்லைமரம்.

அம்பலம் — 1. சபை. (உ-ம்.) "ஏழைசொல் அம்பலமேறுமா" (வழக்.) 2. சித்திரகூடம். 3. சிதம்பரத்திற்சபை. (உ-ம்.) "அம்பலத்தெம்பரனருள்ளாலுணர்ந்து" (சூத. எக்கி. பூ. ௧: ௪௦.) 4. பலருங்கூடத்தக்காணுமிடம். 5. வெளி.

அம்பலவன் — சிவன். (உ-ம்.) "குவளைக்களத்தம்பலவன்" (திருக்கோ. ௩௩.) [ஆ வெல-சபை.]

**அம்பலநாட்டான்** *ambala-nāṭṭāṉ*, பெ. (n.) 1. *ஊர்த் தலைவன்*; headman of a village. 2. *அம்பலகாரன், ஊரவைத் தலைவன்*; chairman of a village assembly. ''*கிராமமுன்சி பம்பல நாட்டா ரெவர்க்கும்*'' (*பஞ்ச. திருமுக. 380*).

**அம்பலம்**[1] *ambalam*, பெ. (n.) 1. *பலர் கூடும் வெளியிடம்*; open space for the use of the public. '*அம்பலக் கழுதை அம்பலத்திற் கிடந்தா லென்ன? அடுத்த திருமாளிகையிற் கிடந்தா லென்ன?*' (*பழ.*). 2. *ஊரவை*; village assembly for transacting village affairs. '*அகதி சொல் அம்பல மேறாது*' (*பழ.*). 3. *கற்றோரவை*; assembly of scholars. '*அரைச்சொல் கொண்டு அம்பல மேறலாமா?*' (*பழ.*). 4. *கூத்துக் காண்போர் இருக்கை*; pit of a theatre. ''*அம்பலமு மரங்கமுஞ் சாலையும்*'' (*சீவக. 2112*). 5. *தில்லையம்பலம்*; Śiva shrine at *Tillai* (Chidambaram). ''*பாம்பலங் காரப் பரன்றில்லை யம்பலம்*'' (*திருக்கோ. 11*). 6. *சித்திரகூடம்* (*சங்.அக.*); Viṣṇu shrine in Chidambaram. 7. *சிற்றூர் அலுவல் (கிராம உத்தியோக) வகை*; village revenue office. 8. *அம்பலகாரன்*; headman of a village. 9. *கள்ளர், வலையர் பட்டப்பெயர்*; a caste title of Kaḷḷars and Valaiyars.

**1836 ஆம் நூற்றாண்டு மெக்கென்சி கையெழுத்துப் பிரதி (Mackenzie Manuscripts) கள்ளர் பட்டம் அம்பலகாரர் இன்று குறிப்பிடுகிறது...**

THE

# MADRAS JOURNAL

OF

# LITERATURE AND SCIENCE,

PUBLISHED UNDER THE AUSPICES

OF THE

MADRAS LITERARY SOCIETY

AND

AUXILIARY OF THE ROYAL ASIATIC SOCIETY.

EDITED BY

ROBERT COLE, Esq.

MADRAS MEDICAL ESTABLISHMENT,

SECRETARY TO THE ASIATIC DEPARTMENT OF THE SOCIETY.

VOL. IV.

*July—October* 1836.

MADRAS:

PRINTED AT THE ATHENÆUM PRESS,

BY J. B. PHAROAH, AND PUBLISHED BY J. P. BANTLEMAN,

AT THE COLLEGE,

MDCCCXXXVI.



the *Agambadiyar* tribe. The female children of such marriages can intermarry with the *Maravas*, but not among the *Agambadiyar* tribe. On the other hand, the male offspring of such marriages, is considered to be of the mother's tribe, and can intermarry with the *Agambadiyas*, but not in the tribe of the *Maravas*. Among the whole of the *Maravas* the usual titular sirname is *Dever* (god). Among the *Agambadiyas*, the ordinary sirname is *Servikaren*. The titular sirname of all the *Kallars* is *Ambalakaren*. The tribes that pay outward respect to the authority of the *Sethupathi*, are the eighteen chiefs of the Tanjore country; *Udiyat-dever* the chief of *Sivagangai*; the *Tondaman* of *Puthu-Kotai* (or new fort): these testify towards him great veneration. The reason is because *Tirumala-naicker*, the sovereign of the Madura and Trichinopoly country, gave to the *Sethupathi*, the title of *Tirumala-Sethupathi*; bestowed on him the appropriate insignia of royal power; presented to him the lion-headed palanquin, in which he himself had been accustomed to be carried; called him his adopted son; invited him to eat of the cold rice of which he (the king) had before partaken; and conferred on him the title of *Sethupathi*. In consequence the aforesaid persons, from that time forwards, rendered to the *Sethupathi*, the respectful recognition due to a superior; (that is, standing before him, with the two palms of the hands joined together, and held in front of the breast). The following chiefs among the seventy-two Poligars of Madura, that is to say, the chiefs of Tinnevelly, *Cata-boma nayak* of *Panjalam-curuchi*, *Serumali-nayak* of *Cadal-cudai*, the *Tokal-var Dottiyas*, being all of inferior caste, fall prostrate before the *Sethupathi*; and afterwards are not allowed to be seated in his presence, but stand with their arms (respectfully) folded. The following chiefs pay the *Sethupathi* no exterior sign of respect or homage whatsoever; that is to say, the *Sillavas* and others of *Vettiyáburam*, the *Vadai-carei*, *Sokam-pattai*, *Uttu-malai*, *Settúru*, *Sarandai*, and other *Marava* chiefs; with the *Vanaiya* chiefs of *Siva-giri* of seven thousand fields, the *Talivan-Kotai*, and other *Vanaiya* chiefs. If they come before the *Sethupathi*, he rises in token of courtesy. When the *Sethupathi* goes out publicly, the criers (or heralds) proclaim him to be servant of the house of *Tirumala-naicker*, and invincible by the seventy-two chiefs (poligars) of Madura. Thus much is the narrative of the *Sethupathis*, and other *Maravas* of the *Sembu-nattu*.

The following is a circumstantial account of the *Maravas* of *Kóndian-Kottai*, and of the *Upu-Kottai Maravas*, who are heads of districts in the province of Tinnevelly. Among the *Upu-kottai Maravas* is *Vadagarai Senna-nancha deven*; among the *Kóndian-Kottai Maravas* are *Periya-sami-deven* of *Sakampati*; *Maruthapa-deven* of *Uttu-malai*, *Tiru-vanal-deven* of *Settur*, *Kadari-Saravat-deven* of *Surandi*, *Sethu-rayen* of *Singam-patti*; *Nalla-Kutti-deven* of *Urkádu*, *Sevel-puli-deven*

## *"அம்பலகாரப் புலி :-*

*கிபி 18 ஆம் நூற்றாண்டில் பாடப்பட்ட " குன்றக்குடி நொண்டி நாடகம்" எனும் ஒலைச்சுவடியில் இடம்பெற்றுள்ள அம்பலக்காரர் கள்ளர் பற்றிய வரிகள்.*

*குபேரக் குடி*

*கள்ள நாட்டு அம்பலக்காரப்புலி*

*சீரும் புலி பெற்ற கலங்காப் புலி*

*கள்ளர் பற்றுக்கு ஒரு துள்ளுக் குட்டி*

*சேறுப்புலி வெள்ளையன்*

*சிறுகுடி நாட்டு கள்ளர் என்னை சேர்ந்த கிளை*

*என்னை சார்ந்த கிளை நிரை மேலை நாட்டவரும் "*

6. வெள்ளையூரு நாட்டுக்குள்ளே – நாங்கள்
மேல்வட்ட மாகவே னாளாவட்டத்தில்
உள்ளே குபேரக் குடியாக – ஊரிலுற்
றோங்கன் பேறும் பெற்றேன்.
அம்புலகாரப் புலிகள்ளபட மகந்தவிளக் குன்ற நாட்டுப்பு 17
செம்பொன் வரை புயத்தான் – கெடி
சீரும் புலி பெற்ற தெள்ளியவான்
கலங்காப் புலிநானே – யிந்த
கள்ளர் பத்து கொருதுள்ளுக் குட்டியெங்கள்
குலங் கேழ்க்க யிந்திரகுலம்

கொட்ட மடக்கிய பட்டப்பெரு
விறாதி வீரனல்லவே – வெகு
மேஷ்ட்டிமை யாகிய தாஷ்டிகவான்
சேறுப்புலி வெள்ளையன் – யெங்கள்
சித்தப்ப னென்னை வளத்தப்பன் கான்
சிறுகுடி நாட்டுகள்ள ரென்னை
சேர்ந்தகிளைப் யென்னை சார்ந்தகிளை
நிரை மேலே நாட்டாரும் – யெங்கள்
ரெத்தக் கலப்பிலு தித்த சன்மகரு
மாத்தூற் நொண்டியும் தான் – மயித்த

## கண்ணதாசன் பார்வையில்

**"முக்குலத்தோர்க்கே உலகில் உவமை காண்பது அருமையடா!" என்று பாட்டெழுதியிருக்கிறீர்களே, முக்குலம் என்பது சாதியைக் குறிப்பதல்லவா? சாதிகளை நீங்கள் ஆதரிக்கிறீர்களா?**

முக்குலம் என்பது சாதியல்ல. கள்ளப்படை, மறப்படை, அகப்படை ஆகிய மூன்று படைகளைக் குறிக்கும். பகைவரின் பாசறைக்குள் ஊடுருவி உளவறிந்து வருவது கள்ளப்படை, நேர் சென்று போர் புரிவது மறப்படை. கோட்டையைக் காப்பது அகப்படை. இம்முப்படைகளே, கள்ளர் - மறவர் - அகம்படியர் என்ற முக்குலமாக மாறின. தலைமறைந்து செல்வதைக் கள்ளத்தனம் என்றும், துணிந்து நிற்பதை மறத்தனம் என்றும் அழைப்பதை அறிவீர்கள். இவை, பின்னால் வந்த வழக்குகள். உளவறியும் கடினமான வேலையைச் செய்ததால்தான், கள்ளப்படைக் குலத்தினரை 'அம்பலக்காரர்கள்' என்று மரியாதையோடு அழைக்கிறது, மறவர் நாடு.

## *அம்பல் : சிலரறிந்து புறங்கூறு மொழி. (தொல். பொ. 225.)*

*அம்பல் என்றால் ஒற்றாடல் என்று பொருள். அதாவது உளவறிதல். ஒற்றுவேலை செய்து மன்னருக்கு தகவல் அனுப்புவது. இது போர் மறவர்களின் பணிகளில் ஒன்று. படையெடுத்து வரும் பகையரசனிடம் அதிரப் பொருதல், கோட்டைக் காவல்/ முற்றுகை போன்ற செயல்களைப் போல் உளவறிதல் நிர்வாகத்தின் முக்கியப் பணி. அந்தச் செயலுக்கு அம்பல் என்று பெயர். ஒற்றறிந்து செய்தியை மன்னருக்கு வெளிப்படுத்துவதால், அதாவது இரசியத்தை கண்டுபிடித்து சொல்வதால் இதை "அம்பலப்படுத்துதல் " என்கிறோம். இந்தச் செய்யும் கள்ளர்கள் அம்பலகாரர்கள் என்று அழைக்கப்பட்டனர். குலங்களாக வளர்ச்சி பெற்ற பிறகு இதனை செய்தவர்கள் கள்ளர்கள்.*

*(தகவல் : திரு . மருதுபாண்டியன் இரா.)*

*ஒவ்வொரு கள்ளர் நாட்டிற்கும் தலைவர் நாட்டார் எனப்பட்டார். அந்நாட்டார்கள் "அம்பலம் "என்ற பட்டத்தை சூட்டிகொண்டர்கள். அதனால் இவர்கள் நாட்டார் கள்ளர்கள் அல்லது நாட்டுகள்ளர்கள், அம்பலகாரர்கள் எனவும் அழைக்கப்பட்டனர். பிறமலை கள்ளர்கள் நாட்டுகள்ளர்களைபோல "அம்பலம்' என்ற அதிகார அமைப்பை உருவாக்கிகொள்ளவில்லை. அதே சமயம் தங்களின் முன்னோர்களின் நினைவாக ஊர்களில் உள்ள பொதுஅமர்வு கல்லிற்கு "அம்பலக்கல் "என்று பெயரிட்டுகொண்டனர். ஊரின் முக்கிய நிகழ்வுகளில் இன்றும் இந்த "அம்பலக்கல்லிற்கு "மரியாதை செய்யப்படுகிறது. மதுரை நகரத்திற்கு கிழக்கு பகுதியில் உள்ள நாட்டு கள்ளர்கள் பெரும்பாலும் "அம்பலம் " என்ற பட்டதை பயன்படுத்துகின்றனர். (தகவல் : பிறமலைகள்ளர் வாழ்வும் -வரலாறும் நூலாசிரியர் திரு . சுந்தரவந்திய தேவன்)*

*மதுரை மாவட்டம், மேலூர் பகுதி கள்ளர்களின் சாதி பட்டமாக தேவர் பட்டமிருந்தது, நாட்டின் தலைவர் கரையின் தலைவர் ஊரின் தலைவர் ஆகியோருக்கு மட்டும் சிறப்பு கௌரவ பட்டமான அம்பலகாரர் பட்டமிருந்தது. இதன் பிறகு அம்பலகாரர் சபை கூடி நாட்டின் தலைவர், கரையின் தலைவர் - பெரிய அம்பலம் என்றும் திருமணமானவர்கள் அம்பலம் என்றும் விதிமுறைகளில் சில மாற்றங்கள் கொண்டு வந்தனர். அம்பலம் என்னும் பட்டம் தலைவருக்கான பட்டம், நாட்டின் தலைவர், ஊரின் தலைவர், கரையின் தலைவர், குடும்பத்தலைவர் ஆகியோர் அம்பலம் பட்டம் போட அனுமதியுண்டு. (தகவல்: திரு . வல்லாளத்தேவன், கள்ளர் நாடு)*

*மேலும் அம்பலம் என்பதற்கு வேறு சில விளக்கங்கள் உள்ளன*

:23). சோழியகுளத்திற்கு அண்மையில் அம்பலப்பெருமாள் என்ற இடமுள்ளது. அம்பலம் என்பது சோழர் காலத்தில் வணிகர்கள் தங்கும் இடத்தைக் குறிக்கிறது. காலப்போக்கில் இப்பெயர் அம்பலவெளி, அம்பலப்பெருமாள் என மாறியதை தமிழ் நாட்டில் காணமுடிகிறது(Nilakanta Sastri 1984: 513-76). நீராவி என்பது வட இலங்கையில் பல இடங்களுக்

*குமரிநாடிருந்த பண்டைக் காலத்தில், குமரிமலைக்கும் பனிமலைக்கும் நடுவிடத்திலிருந்த தில்லைநகரைப் பாண்டியன் பாருக்கு நெஞ்சத் தாவாகக் கொண்டு, அங்கு நடவரசன் திருப்படிமை நிற்க அம்பலம்*

அமைத்தான். நடவரசப் படிமைகள் நிற்கும் கோவில்க ளெல்லாம், அம்பலமென்று பெயர் பெற்றிருப்பது கவனிக்கத் தக்கது.

அம்பலம் ஆடரங்கு.
அம்பலக் கூத்தன்

என்பன தில்லைச் சிவன் பெயர்கள்.

பேரம்பலம் ஏற்பட்ட பின், ஆடம்பலம் சிற்றம்பலம் எனப்பட்டது. அப்பெயரே இன்று சிதம்பரம் எனத் திரிந்து வழங்குகின்றது. சிற்றம்பலம் பொன்னால் வேயப்பட்டபின், பொன்னம்பலம் எனப்பட்டது. அதன் பின்னரே மணியம்பலம் வெள்ளியம்பலம் செப்பம்பலம் முதலியவை தோன்றின.

அம் - அம்பு - அம்பல் = 1. கூடுதல், கூட்டம். ஒ.நோ: உம் - கும் - கும்பு - கும்பல். அம்பல் - அம்பலம் = கூட்டம், அவை, கூடுமிடம், மன்றம்.

அரும்பு போன்ற சிலருரை பழி. "அம்பலும் அலருங் களவு வெளிப்படுத்தலின்" (தொல். கள. 48). "அம்பலும் அலரும் களவு." (இறை. 22).

**The Cyclopædia of India and of Eastern and Southern Asia, Commercial Industrial, and Scientific Products of the Mineral, Vegetable, and Animal Kingdoms, Useful Arts and Manufactures**

and Maravar became well known by their adhesion to the British or French standards, and for the fidelity and devotion to the cause of the party which they espoused. The chief Kollar districts were the Tondaman country, Nattam, and Mylore; the last two are in the Madura district. They have a first and second marriage, like the Maravar of Ramnad. The titular surname of all Kollar is Ambalakaren. Calicoil was the stronghold of the lord paramount, the raja of Tondamandalam, the country of the Tondaman, which was an ancient division of the Peninsula of India, of the part now occupied by the Arcot and Chingleput collectorates. H.H. the raja Tondaman of Pudu-cottah is now a petty chief, and his country

The monkey-faced races in the south of India are all brave and martial people, with much physical power and endurance. Their habits and customs are entirely aboriginal. Nominally of the Saiva sect, they are mostly devil-worshippers. They usually bury their dead. They have a first and second marriage, like the Maravar of Ramnad. The titular surname of all Kallar is Ambalakaren, and they returned 155,537 in 1881. Divorce and re-marriage of widows are allowed. Marriage of near relatives is usual. The Western Kallar of Madura are polyandrists. It constantly

independence and non-submission to any form of subjugation". They were expert soldiers and constituted the bulk of Chola and Pandya armies.

One of the principal weapons of the Kallars is the boomerang. This has evoked comparisons with the Australian aborigines and vouch for the theory that Kallars were one of the earliest people to inhabit the Indian subcontinent. The principal occupation of Kallars is farming.

Kallars are found largely in Madurai, Sivagangai, Pudukkottai, Thanjavur, Trichy, Theni and Ramanathapuram districts of Tamil Nadu. One of their popular deities is Kallazhagar who is a warrior form of Lord Thirumala or Venkadavan.

There are various sub-sects of Kallars, among whom the Ambalakarar is the most important. They were a warlike people who strongly resisted every British attempt to subjugate them. They are found in Madurai and Sivaganga districts. In these districts, each village is headed by an Ambalakarar (president of an assembly) and the Ambalakarars took upon themselves the power to adjudicate disputes that arose amongst the habitants in the "nadu", belonging to different sects. They used to hear complaints, hold inquiries and punish the offenders. They wielded considerable powers to intervene in any kind of transaction or transfer of property amongst the people. No land could be alienated from one man to another without the permission of the Ambalakarars. Another important Kallar subcaste is the Piramalai Kallar. They are highly conservative and have preserved their customs and traditions to the present day. They are also believed to be the oldest habitants of the Tamil nation with reports of their presence going back to Tamil literary works of the 4th century BC. They are found chiefly in the districts of Madurai and Theni. Their popular deity is Amman, the Mother Goddess.

There are kallar settlements in Aziz Nagar (near Ulundurpettai), Pammal (near Tambaram) and Prisly Nagar (Otteri,Chennai). Kallars (Thevar pattam) in these settlements are belived to be migrated from southern parts of Tamil Nadu to a place called Veppur (Cuddalore district). A temple ("Nallathangal kovil") laid down by them at Veppur on their migration and a Nallathangal temple found in a southern district is the only link to establish their migration.

**Maravar:** Maravar (meaning "veerar",upper caste), are one of the oldest social groups to be mentioned by the Sangam Tamil literature. This indicates a connection with the Tamil land which is at least 2,000 years old. The writers of the Sangam Age place them in rural settlements withdrawn from cities. Maravar, in Tamil, means a warrior. Maravars

The political history of the Kallars is known for its Kaval system in which some of the heads of the Kallar nadus were called as Ambalakarans. The Ambalakarans used to exercise both the law and order and judicial powers for safeguarding the life and property of the local people and rendering justice to the victims for which they collected a Kaval fee. There were also patti-kaval at the village level. Similarly, they were connected with the temple complexes as secular kaval karans at Kanchi, Srirangam and Alagarkoil (Mahalingam : 1967).

## BOOK-South Indian Gilds

*Among the Kallars of Madura and Trichinopoly Districts, the community implicitly obeys the Ambalakaror headman. Cases of theft of cattle are successfully ttaced if referred to their caste-punchayat; and moral offences are effectively punished through excommunication if necessary. The accused during all such special gatherings ot the punchayat are to pay expenses of the gatherings which may extend to three or four days,* (அரியலூர் கள்ளர்கள்)

RURAL GILDS 35

*The Kallars of Ariyalur*

Among the Kallars of Madura and Trichinopoly Districts, the community implicitly obeys the Ambalakar or headman. Cases of theft of cattle are successfully traced if referred to their caste-punchayat; and moral offences are effectively punished through excommunication if necessary. The accused during all such special gatherings ot the punchayat are to pay expenses of the gatherings which may extend to three or four days.

# நரசிங்கன்பட்டி அர்ச்சுனப் பெருமாள் அம்பலகாரர்

## (ஆண்டு 1615)

கி.பி.1538 இல் இளையாத்தக்குடியான குலசேகரபுரத்தில் திருவேட்பூருடையான் அழகிய பரிபாலார் சோலையார் ஏகப் பெருமாள் சேவகப் பெருமாள் புத்திரன் அழகன் செட்டியார் அழகப் பெருமான் ஊருணியைக் கோனாபட்டில் புதிதாக உருவாக்கினார். ஊருணியுடன் கற்பக விநாயகர் கோயிலையும் அமைத்தார். (பு.ச.க. 861). இதனைக் கி.பி 1854 இல் மீண்டும் புதுப்பித்தனர்.

**வணிகவருமானமும் ஊருணியும்.**

மதுரை மேலூருக்கு அருகிலுள்ள நரசிங்கன் பட்டியில் கி.பி 1615 ஐ சார்ந்த கல்வெட்டு ஒன்று பொறிக்கப்பட்டிருக்கிறது. பஞ்சு, உப்பு ஆகிய வற்றை வணிகம் செய்ய நகரத்தார்கள் எல்லாரும் நரசிங்கன்பட்டி அர்ச்சுனப் பெருமாள் அம்பலகாரர் வீட்டுக்குவந்து ஒன்று கூடிப் போவார்கள். வணிகம் முடிந்து திரும்பி வரும்போது அம்பலகாரர் வீட்டிலேயே அனைவரும் ஒன்று கூடிக் கணக்குப் பார்த்து ஊருக்குத் திரும்புவார்கள். இந்த உண்மை பஞ்சு, உப்பு வணிகக் கூட்டுறவு முறிகளால் அறிய முடிகிறது. அதில் ஒரு வியாபாரக் கூட்டில் வந்த வருமானம். 743.3/4 வராகன். இதனைக் கொண்டு இங்கு ஓர் ஊருணி வெட்டிக் கற்கட்டிடம் கட்டியுள்ளனர் நகரத்தார்கள். இந்த ஊருணிக்கு நகரத்தார் ஊருணி என்றும் பஞ்சுப்பொதி ஊருணி என்றும் பெயராகும். இதனை இந்த ஊருணியிலுள்ள கல்வெட்டுணர்த்துகிறது. (புலவர் இராம. தெய்வராயன் (1982) மெய்யாத்தான் படைப்பு. பக் 17.18)

**ஊருணி அமைந்த முறைமை**

கண்டவராயன்பட்டியில் கி.பி. 1876 இல் பழ. கரு. குடும்பத்தார் பொதுத்தருமமாகத் தண்ணீர் ஊருணி அமைத்தனர். இவ்வூருணியை வெட்டும் முன்னர் அந்த இடத்தில் பூமிபூசை செய்யப் பெற்றது. பின் நூற்றெட்டுப்பசு மாடுகளை விலைக்கு வாங்கி வந்து ஊருணி அமையும் இடத்தில் மூன்று நாள்கள் கிடை போட்டனர். பின் வேத பாராயணம் செய்து பழ. கரு. வினைதீர்த்தான் செட்டியார் திருக்குளத்தைத் தொடங்கி நிறைவு செய்தார். குளத்துக்கு முன்னே தன்னுடைய அன்னையார் முத்துக்கருப்பி ஆச்சி பெயரால் முத்துக்கருப்ப விநாயகரையும் எழுந்தருளச் செய்தார். இந்த ஊருணியில் ஆறுபடித்துறைகள். மிக நன்றாகக் கல் திருப்பணி இரணியூர்க் கல்தச்சர்களால் செய்யப்பட்டிருக்கிறது. கண்ட விராயன்பட்டியில், ஆகம முறைப்படி வேதம் ஒலிக்க ஊருணி அமைக்கப்பட்டிருக்கிறது. பிற ஊர்களில் இந்த முறை பின்பற்றப்பட்டதா என்பது தெரிந்து கொள்ள இயலவில்லை.

**ஏரி ஊருணியாதல்**

ஏரிகளை அமைத்தும் செப்பனிட்டும் அறம் செய்த நகரத்தார்கள், இதனைக் காலப் போக்கில், குடி தண்ணீர் நலங்கருதி ஊருணிகளாக அமைக்கலாயினர். ஏரி அல்லது கண்மாய்க்கு ஒருபுறம்மட்டும் கரை இருக்கும், ஊருணிக்கு நான்கு புறங்களிலும் கரை உண்டு. மேற்காட்டிய சான்றுகளால் ஒன்பதாம் நூற்றாண்டு முதலே நகரத்தார்கள் தாம் வாழ்ந்த பகுதிகளில் நீர்நிலைகளை அமைக்கும் அறத்தை மேற்கொண்டமை வெளிப்படும்.

2

*மதுரை மேலூருக்கு அருகிலுள்ள நரசிங்கன் பட்டியில் கி.பி. 1615 ஐ சார்ந்த கல்வெட்டு ஒன்று பொறிக்கப்பட்டிருக்கிறது. பஞ்சு, உப்பு ஆகிய வற்றை வணிகம் செய்ய நகரத்தார்கள் எல்லாரும் நரசிங்கன்பட்டி அர்ச்சுனப் பெருமாள் அம்பலகாரர் வீட்டுக்குவந்து ஒன்று கூடிப் போவார்கள். வணிகம் முடிந்து திரும்பி வரும்போது அம்பலகாரர் வீட்டிலேயே அனைவரும் ஒன்று*

*கூடிக் கணக்குப் பார்த்து ஊருக்குத் திரும்புவார்கள். இந்த உண்மை பஞ்சு, உப்பு வணிகக் கூட்டுறவு முறிகளால் அறிய முடிகிறது. அதில் ஒரு வியாபாரக் கூட்டில் வந்த வருமானம். 743.3/4 வராகன். இதனைக் கொண்டு இங்கு ஓர் ஊருணி வெட்டிக் கற்கட்டிடம் கட்டியுள்ளனர் நகரத்தார்கள். இந்த ஊருணிக்கு நகரத்தார் ஊருணி என்றும் பஞ்சுப்பொதி ஊருணி என்றும் பெயராகும். இதனை இந்த ஊருணியிலுள்ள கல்வெட்டுணர்த்துகிறது. (புலவர் இராம. தெய்வராயன் (1982) மெய்யாத்தாள் படைப்பு, பக் 17.18)*

## ***பட்டமங்கள அம்பலகாரர்***

*"பல ஊர்கள் இனைந்து ஒரு நாடாகி, அந்த நாட்டுக்கு ஒரு ஆற்றல்மிக்க தலைவன் "அம்பலகாரன்" என்ற பெயரால் அழைக்கப்பட்டு, அவனது ஆணைக்குக் கட்டுப்பட்டு மக்கள் வாழ்ந்து வந்தனர். "அம்பலகாரன்" என்பது ஒரு வகுப்பாரை குறிக்கும் சொல்லாக சில நேரங்களில் பயன்படுத்தப்பட்டாலும் கூட கள்ளர் நாடுகளின் தலைவர்கள் தான் "அம்பலகாரர்" என பட்டம் சூட்டி வந்தனர். அந்த அம்பலகாரர்கள் குறிப்பிட்ட சில பிரச்சனைகளுக்காக ஒன்றாக கூடி கலந்துரையாடி சிக்கல்களை கலைவகுத்தனர். அவர்களின் ஆதிக்கத்திற்கு உட்பட்ட நாடுகளின் ஆலயங்களில் பட்டுப்பரிவட்ட மரியாதைக்கு உரியவர்களாக மதிக்கப்பட்டார்கள்.*

''அட்டமா சித்தி அருளிய பட்டமங்கை'' எனத் திருவிளையாடற் புராணம் கூறுகின்ற அம்மனின் தலம் தான் பட்டமங்கலம்! அந்தப் பட்ட மங்கல அம்பலக் காரருக்கு திருக்கோட்டியூர் பெருமாள் கோயில் தேர், திருவிழாக்களில் பட்டுப் பரிவட்டம் கட்டிச் சிறப்புச் செய்திடுவர்.

பாகனேரி அம்பலக்காரருக்கு அந்நாட்டுச் சிவன் கோயில், அம்பாள் கோயில்களில் எல்லா உரிமைகளும் மரியாதைகளும் உண்டு. அம்பலக்காரர் என்னும் தகுதியைப் புணம் முதலிய எந்தச் சாதனத்தினாலும் திடீரென ஒருவர் பெற்று விடுவதில்லை. அது பரம்பரையாக வந்து கொண்டிருப்பதாகும். ஒருக்கால் அம்பலக்காரருக்குச் சந்ததியில்லாது போய் விடின் அவரைச் சார்ந்த தகுதியுடைய வேறு ஒருவரை ஊரார் தேர்ந்தெடுத்துக் கொள்வர்.

*“அட்டமாசத்தி அருளிய பட்டமங்கை” என கூறுகிற அம்மனின் தளம், அது தான் பட்டமங்கலம். அந்த பட்டமங்கல அம்பலகாரருக்கு திருக்கோஸ்டியூர் தேர் திருவிழாவில் பட்டுப்பரிவட்டம் கட்டி சிறப்பு செய்வார்கள். பாகனேரி அம்பலகாரருக்கு அந்நாட்டு சிவன் கோவில், அம்பாள் கோவில்களில் எல்லா உரிமைகளும் மரியாதைகளும் உண்டு.*

*அம்பலகாரர் என்னும் தகுதியை பணம் முதலிய எந்த சாதனத்தினாலும் திடீரென ஒருவர் பெற்றுவிடுவதில்லை. அது பரம்பரையாக வந்துகொண்டிருப்பதாகும். ஒருகால் அம்பலகாரருக்கு சந்ததி இல்லாமல் போய்விட்டால் அவரை சார்ந்த தகுதி உடைய வேறொருவரை ஊரார் தேர்ந்தெடுப்பர். (தகவல்: உயர்திரு . கலைஞர் கருணாநிதி )*

*குடிமக்களிடம் வரிகளை பெற்று ஊரையும் வளப்படுத்தி, ஊர்க்காவலையும் வலுப்படுத்தி, குறுநில மன்னர்களுக்கு அடுத்த நிலையில் தங்கள் நாடுகளில் ஆட்சி செலுத்திய அம்பலகாரர்கள்- கள்ளர், மறவர், அகம்படியர் என்னும் மூன்று குழுக்களில் இருந்தார்கள் என்றாலும் இவர்கள் அனைவரும் ஒரே வகுப்பினர் என்னும் உணர்ச்சியை வேங்கடசாமி நாட்டார் அவர்கள் வெளிப்படுத்துகிறார்.”*

# மகா வீரனான இளந்தரி அம்பலக்காரன்

## (ஆண்டு 1730)



செய்தான். இவன் நல்ல சிவபக்தன். புதுக்கோட்டையிலும், திருமயத்திலும் உள்ள சத்திரங்கள் இவனாலேயே ஏற்பட்டன. இத்தொண்டைமான் கிறிஸ்தவப் பாதிரிகளை மிகவும் அன்புடன் நேசித்து ஆதரித்தான். இத்தொண்டைமான், 1730-ல், தன் மூத்தபேரன் **விஜயரகுநாத ராயத்தொண்டைமானை** வாரிசாக நியமித்து, **இளந்தரி அம்பலகாரன், ஆவுடையப்ப சேர்வைக்காரன்** என்ற இரண்டு நன்றியுள்ள சர்தார்கள் காப்பில் அவனை விடுத்துக் காலஞ் சென்றான்.

**விஜயரகுநாத தொண்டைமான்**

இவனே 'புதுவையின் சிறந்த மன்னன்' என்னலாம். திருக்கோகர்ணம் பிரகதம்பிகை சந்நிதியில் வழக்கப்படி இவனுக்கு முடிசூட்டச் செய்கின்றனர். அப்போது, குளத்தூர் **இராமசாமித் தொண்டைமான்** படை கொண்டு தடுத்தான். மகா வீரனான **இளந்தரி அம்பலகாரன்** விஷயத்தைத் தெரிவித்தான். "எல்லாம் நின்னைச் சார்ந்தது" என்றான் இளமன்னன். எடுத்தான் வாளை அம்பலகாரன்; 150 வீரரைக் கூட்டிக் கொண்டான்; சேர்வைக் காரனும் அம்மாதிரியே; இருவர் காப்பிலும் இளமன்னன் கோகர்ணம் சென்றான். இடையே போர் நிகழ்ந்தது. இராமசாமித் தொண்டைமான் படைகள் சிதறியோடின: இராமசாமி சிறையுண்டான். விஜயரகுநாதராயத் தொண்டைமானுக்கும் பிரகதம்பிகை சந்நிதியில் முடி சூட்டப்பட்டது. இதன் பிறகு பச்சைத் தொண்டைமான் எதிர்த்தான்; அவனை ஆவுடையப்ப சேர்வைக்காரர் முறியடித்து, "அரசு நிலைநிறுத்திய ஆவுடையப்ப சேர்வைக்காரர்" என்று புகழ் பெற்றார். இச்சமயம் (1759) **சந்தா சாகிபு** புதுவையை படையெடுத்துப் புதுவையரண்மனையை

**திருவையாற்றுச் சப்தஸ்தலப்பதிகம்**

**கூனம்பட்டி**

**அம்பலகாரர் மகா-ற--ஸ்ரீ குமாரசாமி மேற்கொண்டார்**

**(ஆண்டு 1902)**

**அவர்களால் இயற்றபெற்றது.**



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

திருவையாற்றுச்

# சப்தஸ்தலப்பதிகம்.

இது

தஞ்சைமாநகரைச்சேர்ந்த

கூனம்பட்டி

அம்பலகாரர் மகா-ா-ா-ஸ்ரீ

சா. குமாரசாமிமேற்கொண்டாரவர்களால்

இயற்றியது.

இஃது

தஞ்சை கொள்ளுப்பேட்டைத்தெரு

தமிழ்ப்பாடசாலை மகா-ா-ா-ஸ்ரீ

மு. கோவிந்தசாமி உபாத்தியாயரவர்கள்

வேண்டுகோளால்

தஞ்சை

"ஸ்ரீ வித்தியாவிநோதினி அச்சுக்கூடத்தில்"

பதிப்பிக்கப்பட்டது.

1902-ஆம் தநர்மீ.

## கச்சமங்கலம் அகண்ட பரப்பிர்மமாகிய சொக்கனாதக்கடவுள் மீனாம்பிகை சுப்பிரமண்யக் கடவுள் தாண்மலர்கட்குத் திருக்கச்சமாலை

## இயற்றமிழ்ச்சங்க அக்ராசனாதிபதி

## ஸ்ரீமான் சொ. சிங்காரவடிவேல் வன்னிய முண்டார் அம்பலகாரர்

## அவர்களால் இயற்றியது.

*(1911)*



உ
பரமபதிதுணை
திருச்சிற்றம்பலம்
கச்சமங்கலம்

அகண்ட பரப்பிர்மமாகிய
சொக்கனுதக்கடவுள் மீனும்பிகை
சுப்பிரமண்யக் கடவுள் தாண்மலர்கட்குத்

திருக்கச்சமாலை
உயிர்வருக்க மாலை
இரட்டைமணி மாலை
தனித்துறைகள்

இந்நான்கும்,
கச்சமங்கலம்.
இயற்றமிழ்ச்சங்க அக்ராசனுதிபதி
ஸ்ரீமான்
சோ. சிங்காரவடிவேல் வன்னிய முண்டார் அம்பலகாரர்
அவர்களால் இயற்றியது.

இ॰॰து.
வித்வான்
மகா-ள-ள-ஸ்ரீ
த. சு. அப்பாவுப்பிள்ளை அவர்களாற்
சிறப்புப்பாயிரஞ் சேகரிக்கப்பட்டு
தஞ்சை
கல்யாணசுந்திரம் முத்திராசாலையில்
பதிப்பிக்கப்பட்டது
விரோதிகிருதஞு
கன்னிரவி
1911

**சிவசுப்பிரமணியர் பேரிலும் ஸ்ரீ மஹாவிஷ்ணு பேரிலும்**
**பஜனைக் கீர்த்தனை**
**மதுரைஜில்லா மேலூர் தாலுகா உள்கடை மலம்பட்டி**
**மகா-ற--ஸ்ரீ கருப்பண அம்பலம் குமாரர் சின்னாத்தி அம்பலம்**
**அவர்களால் இயற்றபெற்றது**
**(1924)**


முருகன்
சிவசுப்பிரமணியர் பேரிலும்
ஸ்ரீ மஹாவிஷ்ணு பேரிலும்
பஜனைக் கீர்த்தனை.
இஃது
மதுரைஜில்லா
மேலூர்தாலுகா உள்கடை மலம்பட்டி
மு. கருப்பண அம்பலம் குமாரர்
சின்னாத்தி அம்பலம் அவர்களால்
இயற்றப்பெற்று
மதுரை
மகமதியன் பிரஸில் பதிப்பிக்கப்பெற்றது.
இதன் விலை) 1924 (அணா 5.

# வெள்ளலூர் அம்பலகாரரர்



மதுரை மாவட்டம், மேலூர் அருகே வெள்ளலூர் மந்தை கருப்பண சுவாமி கோயிலில் 60 கிராம மக்கள் பங்கேற்ற வெற்றிலை பிரி திருவிழா நேற்று நடந்தது. விழாவில் அம்பலக்காரர்களுக்கு வெற்றிலை வழங்கப்பட்டது. (செய்தி 3ம் பக்கம்)





*வெள்ளலூர் நாடு என்பது ஏறத்தாழ ஐம்பதுக்கும் அதிகமான சிறிய ஊர்களின் பகுதியாகும். இது வெள்ளலூர் மாகாணம், அம்பலகாரன்பட்டி மாகாணம், மலம்பட்டி மாகாணம், உறங்கான்பட்டி மாகாணம், குறிச்சிப்பட்டி என ஐந்து மாகாணங்களாக பிரிக்கப்பட்டுள்ளது.*

*இந்த ஐந்து மாகாணங்களில் பரவி வாழும் கள்ளர் இன மக்கள் தந்தை வழியில் முண்டவாசிகரை, வேங்கைபுலிகரை, சம்மட்டிகரை, நைகான்கரை, சாயும்படை தாங்கிகரை, வெக்காலிகரை, சலிபுலிகரை, திருமான்கரை செம்புலிகரை, கோப்பன்கரை, மழவராயன்கரை என பணிரெண்டு கரைகளாக பிரிக்கப்பட்டுள்ளனர்.*

*இங்கு ஒவ்வொரு கரைக்கும் இரண்டு அம்பலம் என 24 அம்பலகாரர்கள் தெரிவு செய்யப்படுகின்றனர் ஒவ்வொரு கரைக்கும் இரண்டு இளங்கச்சிகள் தெரிவு செய்யப்படுகின்றனர் இளங்கச்சிகள் என்பவர்கள் அம்பலகாரர்களுக்கு உதவியாளர்கள் ஆவர் இந்நாட்டின் பெரிய அம்பலகாரர் கரை அடிப்படையில் இந்த 11 கரைகாரர்களுக்குள் சுழற்சி முறையில் தெரிவு செய்யப்படுகிறார், இவரே கரை அம்பலங்களின் கூட்டத்திற்கும் நாட்டுக்கூட்டத்திற்கும் தலைமை வகுக்கின்றார் இவரது முடிவே இறுதியானதாக கருதப்படுகின்றது.*

*வெள்ளலூர் நாடு சிதைவுற்று முறைபடுத்தப்பட்ட காலத்திற்கு பின்பு இதுவரை 10 பெரிய அம்பலகாரர்கள் பொறுப்பில் இருந்துள்ளனர்.*

*குற்றப்பரம்பரை சட்டத்தால் பாதிக்கப்பட்ட போது* ***மேலூர் பெரிய அம்பலகாரர் வையாபுரி அம்பலகாரர்*** *அவர்கள் கடுமையான போராட்டத்தில் ஈடுபட்டார்.*

***மாவீரர் சேதுபதி அம்பலம்*** *18 ஆம் நூற்றாண்டில் மருதுபாண்டியருக்காக போரிட்டு தூக்கிலிடப்பட்டார்.*

*கலைஞர் மு.கருணாநிதி அவர்கள் எழுதிய தென்பாண்டி சிங்கம் எனும் நூல் அம்பலகாரர்களின் வரலாற்றையும் பெருமைகளையும் கூறுகிறது. இந்நூல் கள்ளர் நாட்டுத் தலைவன் **வாளுக்கு வேலி அம்பலத்தின்** வாழ்க்கை வரலாறாகும். இந்நூலுக்காக கலைஞர் தஞ்சைப் பல்கலைக் கழகத்தின் ராஜராஜன் விருது பெற்றார். இந்த புதினக்கதை தென்பாண்டி சிங்கம் என்ற பெயரில் தொலைக்காட்சித் தொடராகவும் தொலைக்காட்சியில் வெளியானது இத்தொடருக்கு இளையராஜா இசையமைத்தார்.*



## *தஞ்சை கள்ளர்களின் தலைகாவல் முறி பட்டயங்கள்*

*தஞ்சை கள்ளர்களுக்கு ஈராயிரம் பட்டங்களுக்கு மேல் இருந்தாலும், அப்பாட்டங்களோடு சேர்ந்து அம்பலகாரர் என்று தலைகாவல் முறி பட்டயங்கள் வழங்கப்பட்டுள்ளன.*

*தாது வைகாசி மீ 17 உ ஏரிமங்கலம் நாட்டிலிருக்கும் கறுத்த காங்கய அம்பலகாரர், கீழத்தூவாகுடியைச் சேர்ந்த செங்கிபட்டியிலிருக்கும் ஒத்தய மேல் கொண்டார் அம்பலகாரர் கருவிப்பட்டியிலிருக்கும் இராமைய மேல் கொண்டார் அம்பலக்காரர் இவர்களுக்குக் கூகையூர் சீமை நாட்டார், சொக்கநாத உடையார் , மற்றமுள்ள உடையார் கிராமத்துக் குடியானவர்கள் ஆகிய நாங்கள் மேன் காவல் பட்டயம் எழுதி குடுத்தோம்.*

கொண்டையா, நரசய்யா, லிங்கையா மன்னக்கோன், மரவைக்கோன், பெருச்சிக்கோன், நாங்கள் அனைவரும்; ஏரிமங்கல நாட்டிலிருக்கும் கருத்தக்காங்கயர், வேலாயுதச் சோழகர் இவர்களுக்கு மேன் காவல் முறியெழுதிக் கொடுத்தோம். இதற்கு வருடம் ஒன்றுக்குப் பொறுப்பு, மதுரை சக்கரம் 10. இந்தப் பத்துப் பொன்னுக்குக் கறுத்தக்காங்கயர் பாதிக்கு ஐந்துபொன்னும் ஆகப்பத்து பொன்னும் வருஷா வருஷம் சம்மதித்து நாங்கள் அனைவரும் காவல் முறி கொடுத்தோம்: சாஷிகள் சிறுவாச்சூர் நல்லப்ப ரெட்டியார், பெருமயிலூரர் நல்லப்ப ரெட்டியார், —நாட்டுக் கணக்கு ரெங்கநாதபிள்ளை.

**No. 3.** தாது ௵ வைகாசி மீ 17உ ஏரிமங்கலம் நாட்டிலிருக்கும் கறுத்த காங்கய அம்பலகாரர், கீழ்த்தூவாகுடியைச் சேர்ந்த செங்கிபட்டியிலிருக்கும் ஒத்தய மேல் கொண்டார் அம்பலகாரர் கருவிப்பட்டியிலிருக்கும் இராமையமேல் கொண்டார் அம்பலக்காரர் இவர்களுக்குக் கூகையூர் சீமை நாட்டார் சொக்கநாத உடையார், மற்றமுள்ள உடையார் கிராமத்துக் குடியானவர்கள் ஆகிய நாங்கள் மேன் காவல் பட்டயம் எழுதிக் கொடுத்தோம், மேன் காவலாவது: கூகையூர், மாமாந்தூர், விரபயங்கரம், கறுத்துளகுறிச்சி இந்தக் கிராமம் நான்கும் பொறுப்பு—மதுரைச் சக்கரம் பொன்20. செத்து அளம்பாளம், கிருஷ்ணபுரம் பெருமாள்பாளையம், சிந்தேரி, நரையூர், வடபாதி அரசாங்குடி சிறுபாக்கம்; உறத்தூர், திருவாலந்துரை, மாவிலிவகை, ஆண்டியமடம் ஆகிய இருபது கிராமத்துக்கும் பொறுப்பு மதுரைச் சக்கரம் பொன் 10 இந்த இருபது கிராமம் உட்படக்கிராமம் இருபத்திநான்கும் பொறுப்பு மதுரைச் சக்கரம் பொன் 20 இந்தப்படிக்கிச் சம்மதித்து மேன்காவல் பட்டயங்

***சோழப்புரையர் அம்பலம், அஞ்சாத கண்டப்புரையர் அம்பலம் , வணங்கனாத்தேவன் அம்பலம், தொண்டைமான் அம்பலம், சொக்கட்டான் அம்பலம் என ஐந்து அம்பலகாரர்.***

*(ஆண்டு 1467)*

# நெற்குப்பைச் செப்பேடு

மா. செந்தில்செல்வகுமரன், எம்.ஏ.
தொல்பொருள் அலுவலர், திருநெல்வேலி

இராமநாதபுரம் மாவட்டம், திருப்பத்தூர் வட்டம் நெற்குப்பை என்ற ஊரில் திரு. பொய்யாமொழி என்பவரிடமிருந்து பெறப்பட்ட செப்பேட்டு நகலில் காணப்படும் செய்தி முறையூரில் காட்டுப்புலவர் என்பவரிடம் சேகரிக்கப்பட்ட ஓலைச்சுவடியில் காணப்படும் செய்தியோடு ஒப்பிட்டுக் கூறப்படுகிறது. அவ்வோலைச்சுவடியில் வெண்டேர் செழிய பாண்டிய ராச புதல்வன் கூளைப்பாண்டியன் என்ற ஒரு பாண்டிய மன்னன் குறிப்பிடப்படுகிறான். இம்மன்னனின் ஆளுகையின்கீழ் **பதிக்கோட்டை** என்ற பகுதியிலிருந்து ஆண்டு வந்த **பொன்னன், அமரன்** என்ற இருவரும் இம்மன்னனுக்குப் பகுதிப் பணம் கொடுக்க மறுத்தனர். கூளைப்பாண்டியன் இவ்விருவர்மீதும் படையெடுத்துச் சென்று தோற்றுத் திரும்புகிறான்.

பின்பு பொன்னன், அமரன் இருவரையும் அடக்கக் கூளைப்பாண்டியன் தான் பகுதிப்பணம் கட்டும் சேர அரசன் **ரவிகுப்த சேரதேவ பாண்டியனின்** உதவியை நாடுகிறான். ரவிகுப்த சேரதேவ பாண்டியன் தம் இளைய மக்களாகிய **பராக்கிரமபாண்டிய தேவன், மாமறைத்தேவன், வீரபாண்டிய தேவன், விக்கிரமபாண்டியத்தேவன், செயவேளத்தேவன்** ஆகிய ஐவரையும், ஐம்பது வலசைப்பேரையும் பாண்டியனுக்கு உதவி செய்யும்பொருட்டு அனுப்பி வைக்கிறான். இந்த ஐவரும் படையுடன் வந்து பொன்னன், அமரன் இருவரையும் போரில் வென்று அடக்குகிறார்கள். இந்த ஐவரின் வெற்றிகண்டு மகிழ்ந்த கூளைப்பாண்டியன், ஐம்பது வலசைப்பேர்களில் ஐவரின் பெண்ணை இந்த ஐவருக்கும் மணம் செய்து வைக்கிறான். மேலும் கூளைப்பாண்டியன் தம் நாட்டின் சில வளமான பகுதிகளை இந்த ஐவருக்கும் வழங்கி, அவர்களை இங்கேயே தங்கி இருக்குமாறு வேண்டுகிறான். அவர்களும் பாண்டிய மன்னனின் வேண்டுகோளுக்கிணங்கித் தமக்கென்று வழங்கப்பட்ட பகுதிகளை ஆண்டு வந்தனர். இந்த ஐவருக்கும் வழங்கப்பட்ட பகுதிகள் **முல்லைமங்கலம், சதுர்வேதிமங்கலம், சீர்சேந்தமங்கலம், கன்னமங்கலம், வேலமங்கலம்** என அழைக்கப்பட்டன. மேலும் இந்தப் பகுதிகள் **ஐந்து நிலை நாடுகள்** எனவும் அழைக்கப்படுகின்றன.

ஐந்து நிலை நாட்டுத் தலைவர்களில் ஒருவன் தன் நாட்டு நிர்வாகத்தைக் கவனித்துக்கொள்ள ஒவ்வொரு நாட்டிலிருந்தும் ஒரு திறமையான ஆளைக் கொண்டுவந்து தம் நாட்டுக் காணியாட்சியாக நியமிக்கிறான். இந்த ஐந்து அம்பலக்காரர்களுக்கும் அவர்கள் செய்யும் பணிக்காக நிலம் வழங்குகிறான். அவர்களுக்காக வழங்கப்பட்ட நிலம்பற்றி இச்செப்பேடு குறிப்பிடுகிறது.

செப்பேடு சகாப்தம் 1389 ஆம் (கி.பி. 1467) ஆண்டினைக் குறிப்பிடு கிறது. கார்கார்த்தவேளார், கரைச்சீட்டுப் போட்டு, களக்கோட்டை ராயன் பட்டமான மங்காத்தார் பாண்டியன் தேவன் உள்ளிட்டாற்கும், நேதிராயப் புரை உள்ளிட்டாற்கும், கண்டிபதேவன் உள்ளிட்டாற்கும், வீரமுடிகாங்கேய தேவன் உள்ளிட்டாற்கும் ஆக நான்கு புரையமாற்கும் வழங்கிய நிலம்பற்றி குறிப்பிடுகிறது.

தற்பொழுது இவ்வூரார், காணியாளவந்த சோழப்புரையர், அஞ்சாத கண்டப்புரையர், வணங்கனாத்தேவன், தொண்டைமான் அம்பலம், சொக்கட்டான் அம்பலம் என ஐந்து அம்பலகாரர் இருந்ததாகக் குறிப்பிடுகின்றனர். இந்த ஐந்து அம்பலகாரர்களும் தற்பொழுது முறையே முதலியம்பலம், கருப்பையா அம்பலம், மதியாரி அம்பலம், மாலையிட்டான் அம்பலம், சொக்கட்டான் அம்பலம் என அழைக்கப்படுகின்றனர். இவர்கள் முறையே முல்லை மங்கலம், சதுர்வேத மங்கலம், சிர்சேர்ந்த மங்கலம், கன்ன மங்கலம், வேல மங்கலம் என்ற ஐந்து நிலைநாட்டிலிருந்து வந்தவர்கள்.

இச்செய்தியே இவரிடமுள்ள ஓலைச்சுவடி ஒன்றிலும் காணமுடிகிறது. இச்செப்பேட்டு நகலில் காணப்படும் எழுத்தமைதியினைக்கொண்டு பார்க்கும் பொழுது இது 17-ஆம் நூற்றாண்டினைச் சார்ந்ததாகக் கருதலாம்.

செப்பேடு:

1 உ ஸ்வஸ்தி மகா மண்டல் லீசுபரன் அரிய
2 தள விபாடன் பாசைக்கித் தப்பு மூவர
3 ாய கன்டன் கன்ட னாடு கொண்டு
4 கொன்ட நாடு குடாதான் பாண்டி
5 மண்டலத்தார் அசுபதி கெஷபதி நரபதி
6 தேசு[வின்சு]றிய துரைச்சிய பாரம்ப
7 ன்னி யருளாயி நின்ற சாலிக வாக
8 ன சகாத்தம் 1389 கு மேல்
9 ச் செல்லாயி நின்றெ தாறுன ஸ்வஸ்தி
10 அற்ப்பசி மாதம் 17 தேதி சிய சோள கெம்
11 பீர வளர் நாடாகிய கோனாடு பிறாம
12 லை சூள்ந்த பொன்னமராபதி [நா]ட்டில்
13 பொரு நல்லூரு ஆறை மங்கல[ட்டாற்]
14 கிய பொன்னமரா பதியில் வரிசைலே
15 அருக்கானி யாச்சிக்கி கற்த்தராகிய காருகா
16 ர்த்த வேளாளர் பட்டம் 7கு நத்தம் 705
17 7க்கு குடிக்காடு 1511க்கு விறுமத
18 ாயா 21க்கு தேவதாயம் 212க்கு நா
19 டு 64க்கு தலையூராகிய ஒலியூர் கடத்தம் கா
20 ருக்காத்த வேளாளர் கரைச்சீட்டுப் போ
21 ட்டுக் குடுத்த கானியாச்சி யாவது வரிசை

22 ச இவ்வூருக் கானியாச்சிக்கி கற்த்தன்னா
23 க வந்த தெச்சினாபூமிக்கி கற்த்தனாகிய சே
24 து காவல்ப் புரையர்மற் மன்னர் வாள்
25 களக்கோட்டை ராயன் பட்டமான மங்கா
26 த்தார் பாண்டியர் தேவன் னுள்ளிட்டார்க்கும்
27 நேதிராயப் புரை உள்ளிட்டாற்கும் கன்டி
28 ய தேவன் நகுலராயன் னுள்ளிட்டாற்கு
29 ம் வீரமுடி காங்கய தேவன் னுள்ளிட்ட
30 ாற்கும் ஆ[க]. ரை 4[க்கு] கரைப் புரையர்மா
31 ற் மன்னருக் குடுத்த கானியாச்சி யாவ
32 து ராயமானிய ராயதுரை யவகள் சவு
33 ந்திர பான்டிய ராசர்ப்புரி எறி எல்லைக
34 பட அலவை கல் நட்டபடிக்கி கீள் பாற்
35 க் கெல்லை பாறக் குண்டு புள்ளை யாரடியி
36 ல் கல்லுச் சூலத்துக்கு நத்த பிஞ்சை
37 க்கும் மேற்க்கு தென்ம் பாறக் கெல்[லை]
38 கொட்டை புறக்கிப் படு பாறை புள்ளடி
39 நிலை கல்லு கன்னாயிரபுரம் செங்கல்
40 ...பிஞ்சைக்கும் வடக்கும் மேல்பாற்க்கெ
41 [க]ல்லை கீளக் கோட்டை தலைவாசல்லு
42 க்குக் கிளக்கு வடபாற் கெல்லை மத்தி
43 ல் படுபாறை புள்ளடி ச . . கடிச . . ரம்
44 நிலைகல்லுக்கும் தெற்கு யிந்த நாங்
45 கெல்லைக் குள்ளாகியது மன்னு மனை
46 கோவில்க் குளம் யிடையில் அம்
47 பலம் உம்பளம் யிந்த நாலுவகை
48 ப்புரையர் ஆண்டு கொள்ளுவது யிப்
49 படிக்கி குடுமிமலை கொத்தன் வலக்
50 குறிச்சிமலை கன்னிமலை பூவாலைக்
51 குடிமலை பூலாம் குறிச்சிமலை ஆன்டி
52 ரமடம்டம் கல்வெட்டு தாம்பூர சா
53 தனம் குடுத்தபடி கல்லு புல்லு பூமி
54 சந்திரன் சூரியன் உள்ளவரை
55 யில் ஆள்வது யிப்படி ஷெ யூர் நாட்
56 டு கணக்கு ஆறுகாத வட்டகைமு
57 வேந்திர வேளார் சொல்ப்படித்தி
58 ருப்பூ அளகிய நாயகி ஒலியவ
59 ள் துணை உ

★

## 21. நாட்டார் பட்டயம்

பா. சுப்ரமணியன், சி. இலட்சுமணன்

சிதம்பரம், பேராசிரியர் க. வெள்ளைவாரணன் அவர்கள் 7-10-85 அன்று தமிழ்ப் பல்கலைக்கழகத்திற்கு அன்பளிப்பாக வழங்கிய சர்க்கரை இராமசாமி புலவரின் கையெழுத்துச் சுவடிகளுள் 'நாட்டார் பட்டயமும்' ஒன்றாகும். இப்பட்டயம் அரிய கையெழுத்துச் சுவடித் துறையில் பாதுகாக்கப் பெற்று வருகிறது.

ஓரியூர் சீமை மாகாணத்தில் அஞ்சுக்கோட்டைப்பத்தைச் சேர்ந்த நாட்டார் பெருநிலக்கிழார்களாக விளங்கிய பிள்ளைமார், அம்பலக்காரர் முதலியோர் பாகவத காவியம் பிரசங்கம் என்று போற்றப் பெற்ற சர்க்கரைப் புலவருக்கு அவர் செய்த இராமாயணப் பிரசங்கத்திற்காகக் கொடுத்த பட்டயமாகும்.

இப்பட்டயத்தைத் தொடர்ந்து காணப்படும் குறிப்பு யாரால் எழுதப் பெற்றது என்ற தகவல் தரப்படவில்லை. எனினும் பேரா. வெள்ளைவாரணன் அவர்கள் எழுதியிருக்கக்கூடும் என்று கருதவும் இடமுள்ளது.

### பட்டயம்

மஹா மண்டலேஸ்வரன் ஹரிராய தளவிபாடன் மூவராய கண்டன் மண்ட துட்டரில் துட்டன நெட்டூரன், சிட்டரில் சிட்டன் ... உத்தர் சப்த தீவாதிபன் எம் மண்டலமும் திறை கொண்டருளிய ராஜாதி ராஜன் ராஜபரமேஸ்பரன் ராஜகெம்பீரன் ராஜாக்கள் தம்பிரான் ராஜ சமாகோலாகலன் . . . சாளுவன்அஷ்டலக்ஷ்மி சம்பனன்கோப தளவிட பாடன் கோலகண்டன் ஒட்டியர் தழுவிபாடன் ஒட்டியர் மோகந் தவிர்த் தான். துளுவர் மோகந் தவிர்த்தான். துலுக்கர் தளவிபாடன் இளஞ் சிங்கங் கொட்ட மடக்கினன் வையாளி நாராயாணன் இவுளி பாவடி மதிச்சேருவார் கண்டன் பரிக்கு நகுலன் கொடைக்குக் கன்னன் வில் லுக்கு விஜயன் சொல்லுக் கரிச்சந்திரன் சேது காவலன் ராமநாதசுவாமி காரிய சுவாமி பூசாதுரந்தான் அனுமக்கொடி, சிங்கக் கொடி, கருடக் கொடி, புளிக்கொடி, சேவல்கொடி, காவிக்கொடி குடை மேல்ச் சல்லி தீபன் செம்பி வளநாடன் நாவலம் பெருந்தீவுக்கு நாயகன் பிரபு மகா தேவராயர் மல்லிகா விருப்பாக்ஷிதேவ மகாராயர் ஸ்ரீவாகராய பூதேவ ராய அச்சுததேவமாராய . . . . . . . விராச்சியம் பண்ணியருளா நின்ற சாலிய வாகன சகாப்தம் 1775 க்கு மேல் செல்லா நின்ற விப ஸ்ரீ உத்திராயணம் சித்திரை மீ" 24 தேதி சுக்கிர வாரமும் சதுர்த்தியும்

